Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



பண்பாடு

பெருமை என்றால் உயிரும் கொடுத்துப் பெறுவதுதான் பழந் தமிழர் பண்பாடு.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

தொண்டு

சமுதாயத்துறைக்குப் பாடுபடுவதுதான் உண்மையான அரசியல் தொண்டாகும்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 24 - 5 - 1984 வியாழன் ✻✻ வெளியீடு: 25 - 5 - 1984 வெள்ளி இதழ்: 217

## படிப்பில் - உழைப்பில் - விளையாட்டில்

# நாட்டுப்பற்று தேவை

### முதல்வர் புரட்சித்தலைவர் கருத்துரை

**சென்னை, மே 24- நாட்டுப்பற்று என்பது படிப்பில் மட்டுமல்ல. உழைப்பில் மட்டுமல்ல. விளையாட்டிலும் மிகமிகத் தேவை என்று முதல்வர் புரட்சித்தலைவர் வலியுறுத்தினார். உடற்பயிற்சியில் அனைவரும் அக்கறை காட்டவேண்டும் என்றும் முதல்வர் கருத்து தெரிவித்தார்.**

ஆசிய கைப்பந்து கழகத்தின் மாநாடு இன்று காலை சென்னையில் துவங்கியது. இந்தமாநாட்டிற்கு முதல்வர் புரட்சித் தலைவர் தலைமை வகித்து துவக்கி வைத்தார். இந்திய கைப்பந்து கழகத்தின் தலைவர் சிவந்தி ஆதித்தன் வரவேற்புரையாற்றினார்.

ஆசிய கைப்பந்து கழகத்தின் தலைவர் மேதா, மற்றும் இந்தியகைப்பந்து கழகத்தின் செயலாளர் சர்மா உரையாற்றினர்.

பக்ரைன் நாட்டின் சார்பில் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நினைவு-பரிசு வழங்கப்பட்டது. இந்த கருத்தரங்கில் முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

இங்கு வந்திருக்கும் அனைத்து நாட்டு பிரதிநிதிகளுக்கும் தமிழக மக்களின் சார்பிலும், தமிழக அரசின் சார்பிலும் வணக்கத்தையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். இங்கு பேசியவர்கள் எனக்குபல செய்திகளை தருவார்கள் என எதிர்பார்த்தேன். சில அனுபவங்களை அவர்கள் சொல்லுவார்கள் என்று எதிர்பார்த்தேன் இங்கே கலந்து கொள்பவர்கள் ஒவ்வொரு துறையிலும், நிபுணர்களாக இருக்கிறார்கள் திறமை என்பதும் பயிற்சி என்பதும் பிரிக்க முடியாத ஒன்றாகும்.

என்னைப் பொறுத்த வரையில் ஒவ்வொருவரும் உடற்பயிற்சியில் அக்கறை காட்ட வேண்டும் என்ற எண்ணத்தை கொண்டவன். என்னுடைய ஆசையும், முயற்சியும் அதை சுற்றியே இருக்கும் மனிதனுடைய அறிவு ஆற்றல் மிக்கதாக இருக்க வேண்டுமானால் அதற்கு உடல் பலம் தேவை.

### உழைப்பில் நம்பிக்கை

அறிவுக்கும் ஆற்றலுக்கும் உதவியாக அதுதான் இருக்கும். உழைப்பில் நம்பிக்கை உள்ளவர்கள் தான் விளையாட்டு வீரர்களாக இருக்கமுடியும்.

மக்களுக்கு அதை உருவாக்கி தருவது என்பது சுலபமான காரியமல்ல' எந்த விளையாட்டிலும் சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்ளும் திறமை இருந்தாக வேண்டும்.

அதற்கு பயிற்சி தேவை அதற்கு நம்பிக்கைதேவை அதைவிட நாட்டுப்பற்று அதிகம் தேவை.

நாட்டுப்பற்று என்பது படிப்பில் மாத்திரம்அல்ல, உழைப்பில் மாத்திரம் அல்ல விளையாட்டிலும் மிக, மிக தேவை வட அமெரிக்காதென் அமெரிக்கா, ஐரோப்பா போன்ற ஐந்து ஆறு அமைப்புகள் இருந்தாலும் ஆசியாவிலுள்ள அமைப் பிறகுதான் முக்கியத்துவம் உண்டு. காரணம் சாதனைகளின் சிறப்பை அவர்கள் சாதித்து இருக்கிறார்கள் என்பதுதான.

### நட்பின் இலக்கணம்

விளையாட்டுகளில் எவ்வளவு தான் போட்டி வந்தாலும் வெற்றி, தோல்வியாருக்கு வந்தாலும் அவர்கள் நண்பர்களாக இருப்பது குறிப்பிடத்தக்கது. அது மனித தன்மைக்கு இலக்கணம்.

உலகத்தில் இந்த விளையாட்டு அமைப்புகள் அதற்கு பணியாற்றியிருக்கிறது. இந்தகருத்தரங்கை இந்திய நாட்டின் அதுவும் இங்கே தமிழகத்தில் துவக்கி வைக்கும் வாய்ப்பை கொடுத்த சிவந்தி ஆதித்தனார் அவர்களுக்கும் மற்றவர்களுக்கும் எனது நன்றியைதெரிவித்துக் கொள்கிறேன். இதுவரை இந்தியாவில் இது நடந்ததில்லை. இது தான் முதல் முறையாக நடக்கிறது.

### அண்ணாவுக்கு நன்றி

நான் முதலமைச்சராக இருக்கும்போது இந்த வாய்ப்பு கிடைத்ததே என்பதை எண்ணி அண்ணாவுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

நீங்கள் பல முடிவுகளுடன் இருப்பீர்கள், முடிவுகளை நிறைவேற்ற (இந்த கருத்தரங்கில்) வழிகளை காண்பீர்கள் இங்கே அகில இந்திய கைப்பந்து கழகத்தின் தலைவராக இருக்கின்ற சிவந்தி ஆதித்தன் பேசும்போதுஒன்றை குறிப்பிட்டார். என்னை ஒரு விளையாட்டுக்காரரர் என்று சொன்னார். நான் அதில் திறமை மிககவனாக இருந்து இருந்தால் அங்கே (வீரர்களோடு) உட்கார்ந்து இருப்பேன். நல்ல வேளையாக எனக்கு அது முடியாமல் போய் விட்டது.

ஆனால் அந்த உணர்விற்கு நான் சொந்தக்காரன்.

ஒன்றைநான் சொல்லக் கூடாதுதான். ஆனால் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்தியாவில் ஒரு கிரிக்கெட் கழகம் இருக்கிறது.

### விசித்திர தேர்வுமுறை

நீங்கள் வீரர்களை தேர்ந்தெடுக்கும் போதோ, அனுப்பும்போதோ திறமையை கணக்கிட்டு அனுப்புவீர்கள். ஆனால நேற்று பத்திரிகையில் படித்தது விசித்திரமாக இருக்கிறது அண்மையில் 'போய் கப்' (கோப்பை) வாங்கியவர்கள் மற்றும், முன புகுழுவில் இருந்தவர்கள இருவரையும் போட்டியிட வைத்து அதில் வெற்றி பெறுபவர்களை வெளிநாட்டிற்கு அனுப்புவதுஎன்று செய்தி வந்திருந்தது. அது பற்றி நான் வேதனை அடைகிறேன்.

டீம்(குழு)என்பது அனைவரும் ஒன்று கூடி நடத்துவது அது விளையாட்டில திறமையுள்ளவர்களை தேர்ந்தெடுக்க வேண்டுமே தவிர குழுக்களுக்குள்ளேயே போட்டியிருந்தால் நல்லதல்ல இதுமாதிரி இங்கும் (கைப்பந்து) நடந்துவிடக் கூடாது என்று கருதுகிறேன.

நீங்கள் எண்ணிக்கையில் இங்கே சில பேர் இருக்கிறீர்கள். ஆனால உங்கள் ஒவ்வொருவரின் பின்னே பல லட்சக்கணக்கான இளைஞர்கள் இருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன்.

உங்கள்நாட்டின், நம்முடைய நாட்டின்இளைஞர்களின் எதிர்காலம் உங்கள் கையில் இருக்கிறது என்று எண்ணி மகிழ்ச்சி அடைகிறேன்.

### உலக ஒற்றுமை

அவர்கள் பாதுகாப்பார்கள் என்று மகிழ்கிறேன். நீங்கள் விவாதித்து எடுக்கும் முடிவு ஒரு நாட்டின் நன்மைக்கு மட்டும் அல்லாமல் உலக ஒற்றுமைக்கும் உறுதுணையாக இருக்க வேண்டும் என்ற நம்பிக்கையுடன் வாழ்த்துகிறேன்.

நான் உங்களுக்கு அறிவுரை சொல்லும் அளவிற்கு திறமை பெற்றவன் அல்ல. நான் உங்களிடம் கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது. அதை தருவீர்கள் என்று தமிழ்நாடு அரசு எதிர் பார்க்கிறது.

நாங்கள் ஒரு வாரியத்தை அமைத்து இருக்கிறோம்.

விளையாட்டிற்காக அதற்கு தலைவராக சிவந்தி ஆதித்தன் இருக்கிறார், அவர் என்னென்ன திட்டங்களை தீட்டுகிறாரோ அவைஅனைத்தையும் தமிழகஅரசு ஏற்கும். அவருக்கு நீங்கள் யோசனைகள் சொல்லி உதவ வேண்டும் என்பது என்னுடைய கோரிக்கையாகும்.

நான் ஒருஇந்தியபிரஜை என்ற முறையில் ஒன்றை கூறிக் கொள்கிறேன். அமெரிக்காவில் நடக்கும் ஒலிம்பிக் போட்டியில் சோவியத்நாடு கலந்து கொள்ளாமல் இருப்பதும், சோவியத்தில் நடக்கும் ஒலிம்பிக் போட்டியில் அமெரிக்கநாடு கலந்து கொளளாமல் இருப்பதும் விளையாட்டை வளர்க்காது

இந்த போட்டிகளுக்கு எல்லாம், விளையாட்டு என்று தான் வைத்து இருக்கிறார்கள் இது போட்டிதான் தவிர போராட்டம் இல்லை.

வெற்றி, தோல்வி திறமையை காட்டி அன்பை பெறுகிறார்கள் நீங்களாவது அதைச் செய்ய வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.




சென்னையில் இன்று நடந்த ஆசிய கைப்பந்து விளையாட்டு கூட்டமைப்பு நிர்வாக போர்டு கூட்டத்தை முதல்வர் புரட்சித்தலைவர் துவக்கி வைத்தார்.

நொச்சிகுப்பத்தில்

### வாலிபர் பிணம் கொலையா? போலீஸ் விசாரணை

சென்னை, மே. 24— சென்னை நொச்சிகுப்பம் கடலோரத்தில்30 வயது மதிக்கத் தக்க வாலிபரின் பிணம் ஒதுங்கிக்கிடந்தது.

கழுத்தில் கயிறு கட்டப் பட்டுள்ளன. கால்களும் கட்டப்பட்டுள்ளன.

போலீசார் பிணத்தை கைப்பற்றி பிரேத பரிசோதனைக்கு அனுப்பி வைத்துள்ளனர்.

✻

சென்டிரல் ரெயில் நிலையத்தல்

### வாலிபர் பிணம்

சென்னை, மே 24— சென்னை சென்டிரல் ரெயில் நிலையத்தில் வாலிபர் ஒருவரின் பிணம் கிடந்தது.

இவரது சட்டைபையில் செல்வராஜ் சாத்தூர் என்ற முகவரி இருந்தது.

போலீசார்சாத்தூருக்கு தகவல்அனுப்பிவிசாரித்து வருகிறார்கள்.

## சென்னையில் இருந்து திருச்செந்தூருக்கு

## சுற்றுலா சென்ற பஸ்சுடன் லாரி மோதல்

# 14 பயணிகள் சாவு

### 37 பேர் காயமடைந்தனர்

**தூத்துக்குடி, மே 24- சென்னையில் இருந்து சுற்றுலாப் பயணிகளுடன் திருச்செந்தூர் சென்ற பஸ். ஒன்று ஒட்டப்பிடாரம் அருகே லாரியோடுமோதியதில்14 பேர் இறந்தனர். 37 பேர் காயமடைந்தனர்.**

இந்த பயங்கர விபத்து குறித்து கூறப்படுவதாவது:-

சென்னை பெரம்பூரிலிருந்துதிருச்செந்தூருக்கு சுற்றுலாவாக ஒரு குழுவினர் சென்றனர்.

இந்த பஸ்சில் பெண்கள் மற்றும் குழந்தைகள் உட்பட 50க்கும் மேற்பட்டவர்கள் இருந்தனர்.

பஸ் நெல்லைமாவட்டம் ஒட்டப்பிடாரம் அருகே சென்று கொண்டிருந்த போது எதிரே வந்த லாரியுடன் மோதியது.

இதனால் பஸ்சின் முன் பகுதி நசுங்கியது.

பஸ்சில இருந்தவர்களில் 14 பேர் இடிபாடுகளில் நசுங்கி துடிதுடித்து இறந்தனர்.

இறந்தவர்களில் நான்கு பேர் பெண்கள். ஒருகுழந்தையும் இறந்தது இது தவிர 37 பேர் காயமடைந்தனர்.

விபத்து பற்றி தகவல் அறிந்த போலீசார் விரைந்து சென்று காயமடைந்தவர்களை, தூத்துக்குடி அரசினர் மருத்துவமனையில் சேர்த்தனர். அங்கு காயமடைந்தவர்களுக்குதீவிர சிகிச்சை அளிக்கப்படுகிறது.

இந்த விபத்தில் பஸ் டிரைவரும், லாரி டிரைவரும் கொல்லப்பட்டு விட்டனர்.

பஸ்சில் மொத்தம் எவ்வளவுபயணிகள் இருந்தனர் என்ற விவரம் தெரியவில்லை.

போலீசார் விபத்து குறித்து சென்னைக்கு தகவல் தெரிவித்துள்ளனர்.

காயமடைந்தவர்களில் 3 பேரின் உடல்நிலை கவலைக்கிடமாக உள்ளது.

ராமேஸ்வரம் சென்றுவிட்டு அவர்கள் திருச்செந்தூருக்கு சென்று கொண்டிருந்த போது இந்த விபத்து நடந்தது.

பஸ்சுடன் மோதியலாரி தூத்துக்குடியில் இருந்து உப்புமூட்டைகளை ஏற்றி வந்தது.





பம்பாயில் வகுப்பு கலவரத்தால் படுகாயமடைந்து ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளவர்களை பிரதமர் இந்திராகாந்தி சென்று பார்த்து ஆறுதல் கூறினார்.

## மதுரையில் கர்நாடக முதல்வர் ஹெக்டே

மதுரை, மே 24— உடல்நலக் குறைவு காரணமாக சிகிச்சை பெற்றுவந்த கர்நாடக முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டே நேற்று மதுரை வந்தார்.

கொடைக்கானலில் தங்கி ஓய்வு எடுக்கும்படி அவருக்கு டாக்டர்கள் யோசனை தெரிவித்துள்ளனர்.

அதன்படி ஹெக்டே கொடைக்கானல் செல்ல மதுரை வந்தார். பிறகு கொடைக்கானல் சென்றார்.

உப்பிலியாபுரம் தொகுதியில் வெற்றிபெற்ற கழக உறுப்பினர் ஆர் சரோஜா முதல்வர் புரட்சித்தலைவரிடம் வாழ்த்து பெற்றார்.

## எக்ஸ்பிரஸ் ரயில் மீது அமிலகுண்டு வீச்சு: 18 பேர் படுகாயம்

பம்பாய், மே 24 பம்பாய் அவுரா எக்ஸ்பிரஸ் ரெயில்மீது கலவரக்காரர்கள் அமிலவெடி குண்டு வீசியதில் 18 பேர் படுகாயம் அடைந்தனர். அவர்களில் 2 பேர் நிலைமை கவலைக்கிடமாக உள்ளது.

மராட்டிய மாநிலத்தில் பிவாண்டி, தானே, பம்பாய் பகுதிகளில் கடந்த ஒருவாரகாலமாககலவரம் நடந்து வருகிறது. இந்த கலவரத்தில் இதுரை 172 பேர் இறந்து விட்டனர்.

நேற்றிரவு தானே மற்றும் திவா ரயில் நிலையங்களுக்கு இடையேசென்று கொண்டிருந்த பம்பாய்-அவுரா எக்ஸ்பிரஸ் ரயில் மீது கலவரக்காரர்கள் அமில வெடிகுண்டை வீசினார்கள்.

இதில் 2-ம் வகுப்பு தூங்கும்வசதியுடன்கூடிய பெட்டியில்பயணம் செய்த 18 பேர்படுகாயம் அடைந்தனர்.

இவர்களில் 2 ஆண்களின் கண்களில் அமிலம் பட்டு உயிருக்குபோராடிக் கொண்டிருக்கிறார்கள்.

காயம் அடைந்தவர்கள் அனைவரும் கலயாணில் உள்ள ரெயில்வே ஆஸ்பத்திரியில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டனர்.

பயணத்தை தொடரக்கூடிய நிலையில் இருந்த 4 பேர் சிகிச்சை பெற்று அதே ரெயிலில் பயணத்தைத தொடர்ந்தனர்.

மீதியுள்ள சிகிச்சை பெறுபவர்களில் ஒருவர் ஆண். 7 பேர் பெண்கள் மற்றும் 4 பேர் குழந்தைகள் ஆவர்.

மேற்கண்ட தகவலை மத்திய ரெயில்வே அதிகாரி ஒருவர் தெரிவித்தார். கலவரத்தால்பாதிக்கப்பட்ட ரபோடி, வர்தக் நகர் பகுதிகளை மராட்டிய கவர்னர் ஐ. எச். லத்தீப் இன்று காலை பார்வையிட்டார்,

காயம் அடைந்தவர்கள் பற்றியும் அவர்களுக்கு அளிக்கப்பட்டுவரும் நிவாரணம் பற்றியும் அவர் சுமார் 2 மணி நேரம்தங்கி கேட்டறிந்தார்.

தானே நகரில் போசுரான் ரோடில் கலவரக்காரர்களை கலைக்க போலீசார் ஒரு ரவுண்டு துப்பாக்கிச்சூடு நடத்தினர். இந்த துப்பாக்கிச் சூட்டில் யாரும் காயம் அடையவில்லை என்று போலீசார்தெரிவித்தனர்.

தலைமைக்கழக அறிக்கை எண் 92.84

## தென்னாற்காடு மாவட்டம் கடலூர் நகர கழகத்தோழர்களுக்கு

கழகத்திலிருந்து நீக்கிவைக்கப்பட்டிருந்த கடலூர் நகரைச் சேர்ந்த

திரு புலிசை ஆர். சந்திரஹாசன்

திரு. தெ. ராஜாராம்

திரு. கே. பரசுராமன்

ஆகியோர் தங்களது செயலுக்கு வருந்தி தங்களை மீண்டும் கழகத்தில் இணைத்துக்கொள்ளுமாறு நேரிலும் கடிதம் மூலமும் கொடுத்த வேண்டுகோளினை ஏற்று அவர்கள் இன்றுமுதல் கழகத்தில் இணைந்து பணியாற்ற அனுமதிக்கப்படுகிறார்கள்.

கழக நிறுவனத்தலைவர் மாண்புமிகு டாக்டர் முதல்வர் புரட்சித்தலைவர்அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ்வறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம், எம். பி.

சென்னை-14 அமைப்புச்செயலாளர்
24-5-84 அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்.

அமெரிக்காவில்

## முன்னாள் பிரதமர் மொரார்ஜிதேசாய் சாட்சியம்

நியூயார்க், மே. 24— அமெரிக்க புத்தக ஆசிரியர் செய்மூர்ஹெர்ஷ்மீது முன்னாள் பிரதமர் மொரார்ஜி தேசாய் தொடர்ந்தவழக்கு விசாரிக்கப்பட்டுவருகிறது.

செய்மூர்ஹெர்ஷ் எழுதிய 'ஆட்சியின் விலை' என்ற புத்தகத்தில் மொரார்ஜி தேசாயை அமெரிக்க உளவாளி என்று குறிப்பிடப்பட்டு இருந்தது.

இதை எதிர்த்து மொரார்ஜி வழக்கு தொடர்ந்துள்ளார்.

இந்த வழக்கு விசாரணையில் தேசாய் நேற்று சாட்சியமளித்தார்.

## உளறுவாய் கருணாநிதியே! ஓடுவதேன்? ஒளிவதேன்?

தட்டிக் கேட்க ஆள் இல்லாவிட்டால் தம்பி சண்டப்பிரசண்டன் என்பார்கள்.

தி. மு. க. தலைவர் கருணாநிதியும் அந்த ரகத்தைச் சேர்ந்தவர் தான்.

எதிரில் யாரும் இல்லை என்றால் முட்டுக்கட்டையில் சவால்களை சரமாரியாக வாரி விடுவார்.

திருப்பிக்கேட்டால் ஓடி ஒளிவார் இது திருக்குவளையாருக்கு கை வந்த அரசியல்.

எனக்கும் கருணாநிதிக்கும் தான் போட்டி என்று புரட்சித்தலைவர் பேசிய பேச்சை வைத்து நீட்டி முழக்கியிருக்கிறார்.

அண்ணாநகரில் என்ன ஆச்சு? என்று வினாஎழுப்பினார்,

புரட்சித்தலைவர் இதற்குப் பதிலடி கொடுத்ததும் ஓடுகிறார். ஒளிகிறார், நெளிகிறார்:

என்றைக்கு கருணாநிதியார் புரட்சித் தலைவரை திமுகவில் இருந்து தூக்கி எறிந்தாரோ அன்றே மக்கள் தங்கள்கரங்களில் புரட்சித்தலைவரை ஏந்திக் கொண்டு விட்டனர்.

அன்றேதுவங்கிவிட்டது இந்தப்போட்டி. "தமிழக அரசியல் என்பது1972க்கு பிறகு புரட்சித்தலைவருக்கும் கருணாநிதிக்கும் இடையே நடக்கும் போட்டி தான்.

இந்தப் போட்டிகளில் எல்லாம் மக்கள் ஆதரவு புரட்சித்தலைவர் பக்கம் தான் என்பது உலகறிந்த ஒன்று இதில் சந்தேகம் எதுவும் இருக்கமுடியாது. சாதாரண அறிவுள்ள சாமானியர்கட்குக்கூட இது புரியும். தெரியும்.

1972 முதல் கழகம் துவக்கப்பட்டது முதல் அண்ணாவின் கழகத்தை அமைத்தது முதல் புரட்சித் தலைவர் முழக்கமிட்டு வருகிறார்.

எனக்கும் கருணாநிதிக்கும் தான் போட்டி என்று இது அனைவருக்கும்தெரிந்த உண்மை,

ஆனால் கருணாநிதி ஏதோ ஒரு புது கண்டுபிடிப்பை கண்டவர் போல 1984 ம் ஆண்டு மே மாதத்தில் அண்ணா நகரில் தான் புரட்சித்தலைவர் இந்தக்கருத்தை வெளியிட்டதாகக் கரடிவிட்டு கனைத்துப்பார்க்கிறார்.

இதே கருத்தை புரட்சி தலைவர் உப்பிலியாபுரத்திலும்சொல்லியிருக்கிறார். தஞ்சாவூரிலும் சொல்லியிருக்கிறா.

அதற்கென்ன பதிலை சொல்லப்போகிறார்.

திண்டுக்கல் இடைத்தேர்தலில் இருந்து சொல்லப்பட்டகருத்துதான்இது

அப்போதெல்லாம இதுபற்றி வாய் திறக்காதவர்தான இந்தக் கருணாநிதி.ஏதோ இப்போது 14 கட்சிகளின் தோள் மீது ஏறி நின்று கொண்டு கருடா சவுக்கியமா என்பது போல பதில் தருகிறார்.

"1972ல்இருந்து நான் சொல்லிவரும் கருத்து தான் எனக்கும் கருணாநிதிக்கும்தான் போட்டி" என்று புரட்சித்தலைவர் பதிலடி கொடுத்ததும் பதில்கூற வக்கற்று வகையற்று உளறுகிறார்.

லஞ்சலாவண்ய ஊழல் மகாப்பிரபு திருக்குவளை கருணாநிதிக்கு ஆழ்ந்த அனுதாபங்கள்.

பதில் பேச திராணி இருந்தால் பதில் தரவேண்டும். இல்லாவிட்டால் வாயை மூடிக்கொண்டு சும்மா இருக்க வேண்டும்.

வாயைக் கொடுத்து வாங்கிக் கட்டிக் கொள்ளவேண்டாம்.

இருந்ததில் ஒன்றை இழந்தீர்கள் மேலும் உளறினால் பல இழப்புகளை மக்கள் தருவார்கள்

அமைச்சர் கோவேந்தனிடம்

## ஆர். சரோஜா வாழ்த்துப் பெற்றார்

சென்னை; மே 24— உப்பிலியாபுரம் தொகுதியில் கழகத்தின் சார்பில் போட்டியிட்டு வெற்றி பெற்ற ஆர். சரோஜா இன்று காலை பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர்கோவேந்தனை அவரது இல்லத்தில் சந்தித்து மாலையணிவித்தார்.

தனது தேர்தல் வெற்றிக்கு பாடுபட்டதற்காக அமைச்சருக்கு நன்றியை தெரிவித்து கொண்டார்.

பதிலுக்கு அமைச்சர் கோவேந்தன் உப்பிலியாபுரம் தொகுதியில் தேர்ந்து எடுக்கப்பட்ட சரோஜாவுக்கு பட்டாடையும் மாலையும் அளித்தார்.

சரோஜாவுடன் அவரது கணவர் திருச்சி மாவட்ட இணைசெயலாளர் நல்லுசாமிதுறையூர் உப்பிலியாபுரம் ஒன்றிய செயலாளர்கள், மற்றும் கழகத் தோழர்கள் வந்திருந்தனர்.

## அணு ஆயுத தடை: இந்திய யோசனைக்கு அமெரிக்கா எதிர்ப்பு

வாஷிங்டன், மே 24 அணு ஆயுத தடை பற்றிய இந்தியா உட்பட 6 நாடுகள் தெரிவித்த யோசனையை அமெரிக்கா நிராகரித்துள்ளது.

அமெரிக்க வெளியுறவு இலாகா இதுபற்றிகருத்து வெளியிட்டுள்ளது.

அணுகுண்டு ஆயுத உற்பத்தி, சோதனை மற்றும் ஏவுகணைகளை நிறுத்துமாறும் தடைசெய்யுமாறும்கோரி இந்தியா உட்பட 6 நாடுகள் வேண்டுகோள் விடுத்திருந்தன.

இந்தியா, அர்ஜெண்டினா, கிரிஸ், மெக்சிகோ ஸ்வீடன், தான்சானியா ஆகிய6 நாடுகள் வேண்டுகோள் விடுத்தன.

மீண்டும் ஒரு உலகயுத்தம் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக இந்த வேண்டுகோளினை விடுத்தனர்.

இந்த வேண்டுகோள் பற்றி அமெரிக்கவெளியுறவு இலாகா தனது கருத்தை வெளியிட்டுள்ளது.

அணு ஆயுதங்களுக்கு முழுமையாக தடைவிதிப்பதால் போர் அபாயம் குறையும் என்று சொல்ல முடியாது என்று அமெரிக்கா கருத்து தெரிவித்துள்ளது.

மேற்கு

## ஜெர்மனிக்கு ஜனாதிபதி தேர்வு

பான், மே 24— மேற்கு ஜெர்மனி நாட்டின் 6-வது ஜனாதிபதியாக டாக்டர் ரிச்சர்ட் வான்வீசாகிச்சர் தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார்.

இவர்கிறிஸ்துவஜனநாயக கட்சியின் முக்கியதலைவர்களில் ஒருவர்.

இவர்ஜூலைமுதல்தேதி ஜனாதிபதியாகப் பதவி பொறுப்பு ஏற்பார்.

## மஞ்சள் நீராட்டுவிழா

தென் ஆற்காடுமாவட்டம் கோட்டைக்காடு பகுதி கழகத் தோழர் துரை அரங்க நாதனின் மகள் குங்குமவதி மணிமேகலைக்கு வரும் ஜூன் மாதம் 1 ந் தேதி அவரது இல்லத்தில் மஞ்சள் நீராட்டு விழா நடைபெறுகிறது.

## காஷ்மீரில் ஆளும் கட்சி பிளவுபட்டது

ஸ்ரீநகர், மே 24. ஜம்மு-காஷ்மீரில் ஆளும் தேசிய மாநாட்டுக் கட்சி பிளவுபட்டுள்ளது. அதிருப்தியாளர்கள் முதல்வர் பரூக் அப்துல்லாவை நீக்கிவிட்டதாக அறிவித்துள்ளனர்.

காஷ்மீரில் தேசிய மாநாட்டுக்கட்சி ஆளும் கட்சியாக உள்ளது.

இந்தக்கட்சியில் பெரும் பிளவு ஏற்பட்டு விட்டதாக சொல்லப்படுகிறது.

முதல்வர் பரூக் அப்துல்லாவை எதிர்ப்பவர்கள் மாநாடுஸ்ரீநகரில் நடந்தது.

மொத்தம் 2323 பிரதிநிதிகளில் 62 சதவிகித பிரதிநிதிகள் வந்ததாக சொல்கிறார்கள்.

ஆனால் தேசிய மாநாட்டுக்கட்சி எம். எல். ஏக்கள் யாரும் மேடையில் காணப்படவில்லை.

பரூக் அப்துல்லாவின் மூத்தசகோதரிகாலிடாஷா அதிருப்தியாளர் தேசிய மாநாட்டுத் தலைவராக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளார்.

முதல்வர் பரூக் அப்துல்லாவை கட்சியின் தலைமைப்பதவியில் இருந்து நீக்குவதாக தீர்மானம் நிறைவேற்றியுள்ளனர்.

டி.வி.யில் கவிஞர்

## முத்து-ராமலிங்கம் பங்கேற்கும் நிகழ்ச்சி

சென்னை, மே 24— சென்னை தொலைக்காட்சி நிலையத்தில் இன்று (24-ந் தேதி) இரவு 8-45 மணிக்கு "எங்கள் தாயகம்" நிகழ்ச்சியில் கவிஞர் முத்துராமலிங்கம் பங்கேற்கிறார்.

சீனாவில்

## சென்னை குழுவினரின் நடன நிகழ்ச்சி

பீகிங், மே, 24— பீகிங் நகரில் சென்னை கலாக்ஷேத்திரா குழுவினர் நாட்டிய நிகழ்ச்சி நடைபெற்றது.

ருக்மணிதேவியின் தலைமையில் வந்துள்ள 35 பேர் கொண்ட இக்குழுவினர் நடத்திய நடன நிகழ்ச்சியை சீன தலைவர்கள் ரசித்தனர்.

## தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள கள்ளுக்கடைகள் ஏல அறிக்கை

1984ம் ஆண்டு ஜூலை மாதம் 16ம் தேதியில் இருந்து 1985ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30 தேதியுடன் முடிவடையும் ஒரு கலால் ஆண்டிற்கு தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள எல்லா தாலுக்காக்களிலும் உள்ள கள்ளுக்கடைகள் ஏலம் போடுவதற்கு கீழ்க்கண்ட தேதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. மேற்குறித்த ஏலம் சம்பந்தப்பட்ட தாலுக்கா அலுவலகத்தில் காலை 9-மணிக்கு கீழ்க்கண்ட விவரப்படி நடைபெறும். ஏல நிபந்தனைகள் மற்றும் தேவையான விபரங்களை சம்பந்தப்பட்ட தாலுக்கா அலுவலகங்களில் தெரிந்துகொள்ளலாம்.

| வரிசை எண் | தாலுக்காவின் பெயர் | ஏலத்தேதி |
|---|---|---|
| 1. | தஞ்சாவூர் | 8-6-84 11-6-84 12-6-84 |
| 2. | ஒரத்தநாடு | 6-6-84 7-6-84 |
| 3. | திருவையாறு | 13-6-84 14-6-84 |
| 4. | கும்பகோணம் | 6-6-84 7-6-84 8-6-84 11-6-84 |
| 5. | பாபநாசம் | 12-6-84 13-6-84 14-6-84 |
| 6. | வலங்கைமான் | 15-6-84 16-6-84 |
| 7. | திருவிடைமருதூர் | 8-6-84 11-6-84 12-6-84 |
| 8. | மன்னார்குடி | 6-6-84 7-6-84 8-6-84 11-6-84 |
| 9. | நீடாமங்கலம். | 12-6-84, 13-6-84 14-6-84. |
| 10. | திருத்துறைப்பூண்டி. | 12-6-84, 13-6-84, 14-6-84. |
| 11. | வேதாரண்யம். | 6-6-84, 7-6-84, 8-6-84. |
| 12. | மயிலாடுதுறை. | 11-6-84, 12-6-84, 13-6-84 14-6-84. |
| 13. | தரங்கம்பாடி. | 6-6-84, 7-6-84. 8-6-84, 11-6-84. |
| 14. | சீர்காழி. | 11-6-84, 12-6-84. 13-6-84, 14-6-84. |
| 15. | நாகப்பட்டினம். | 6-6-84, 7-6-84. |
| 16. | நன்னிலம். | 6-6-84, 7-6-84. 8-6-84, 11-6-84. 12-6-84, 13-6-84. |
| 17. | திருவாரூர். | 11-6-84, 12-6-84, 13-6-84, 14-6-84. |
| 18. | குடவாசல். | 6-6-84, 7-6-84 |
| 19. | பட்டுக்கோட்டை. | 6-6-84, 7-6-84, 8-6-84. |
| 20. | பேராவூரணி. | 11-6-84, 12-6-84. |

ஓ'ம்' ஓ பி. சோசம்மா,
மாவட்ட ஆட்சியர்,
தஞ்சாவூர்.

இடம்: தஞ்சாவூர்
நாள் 22-5-84



கடலூர் நகர தி.மு.க. துணை செயலாளர் பி குப்புசாமி தலைமையில் 140 பேர் தி.மு.கவில் இருந்து விலகி முதல்வர் புரட்சித்தலைவர் முன்னிலையில் கழகத்தில இணைந்தனர். அப்போது அமைச்சர் பண்ருட்டியார் கடலூர்தொகுதிகழக சட்டமன்ற உறுப்பினர் பாபுகோவிந்தராசன் உடனிருந்தார்.


PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN

# பம்பாயில் தொடர்ந்து வன்முறை கலவரம்: இதுவரை 172 பேர் சாவு

**பம்பாய், மே 24. பம்பாயில் கலவரம் இன்னும் ஓயவில்லை காவல் நிலையத்தை ஒரு வன்முறைக் கும்பல் ஆயுதங்களுடன் தாக்கியது. கூட்டத்தை கலைக்க போலீசார் துப்பாக்கியால் சுட்டதில் ஒரு பெண் உள்பட 8 பேர் இறந்துபோனார்கள். இதுவரை 172 பேர் கலவரங்களில் கொல்லப்பட்டுள்ளனர்.**

மராட்டிய மாநிலத்தில் வெளியாகும் ஒரு பத்திரிகையில் சிவசேனை இயக்கத்தலைவர் பால் தாக்கரேஒருவகுப்பினரை பற்றி காரசாரமாக எழுதியதாகக் கூறப்படுகிறது அதைத் தொடர்ந்து பர்பானி நகரில் வைக்கப்பட்டுள்ள அவரது சிலைக்கு செருப்பு மாலை போடப்பட்டது. இதனால் முண்டதகராறு வகுப்புக் கலவரமாக உருவெடுத்தது.

பிவாண்டியில் தொடங்கிய கலவரம் தானே, பம்பாய் பகுதிகளுக்கும் பரவியது. வழியில போவோர் வருவோர் தடுத்து நிறுத்தப்பட்டு, பெயர் விசாரிக்கப்பட்டுகத்தியால் குத்தப்பட்டனர். பல இடங்களில் வீடுகள் சூறையாடப்பட்டு தீவைக்கப்பட்டன.

பேர் உயிர் இழந்தனர்.

தானே அருகே வந்து கொண்டிருந்த அவுரா-பம்பாய் எக்ஸ்பிரஸ் ரெயில் மீது வன்முறையாளர்கள் அமில குண்டுவீசினார்கள். அதில ரெயிலில் பயணம் செய்த 17 பேர் காயம் அடைந்தனர் அவர்கள் சிகிச்சைக்காக கல்யாணில் உள்ள ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர்.

## 3400 பேர் கைது

இதேபகுதியில்கினாவ்லி என்னுர் இடத்தில் வாரச்சந்தை நடத்தியவர்கள் மீது 500க்கும் அதிகமானவர்கள் திடீர் தாக்குதல் நடத்தினர் பாதுகாப்புக்காக நிறுத்தப்பட்டிருந்த ஒரு போலீஸ்காரர் அக்கும்பலைக் கலைப்பதற்காக துப்பாக்கியால் சுட்டார். ஆத்திரம் அடைந்த வன்முறையாளர்கள் போலீஸ்காரர் மீது பாய்ந்து அவரைக் கொன்றுவிட்டனர்

இதுவரை இந்த கலவரத்தில் 172 பேர் கொல்லப்பட்டனர்.

500க்கும் அதிகமானவர்கள் காயம் அடைந்தனர். 3 ஆயிரத்து 400பேர்வரை கைது செய்யப்பட்டனர்.

கலவரப் பகுதிகளில் இன்னும் ஓரிரண்டு தினங்களில் சகஜநிலை திரும்பும் என்று அப்பகுதிக்கு பொறுப்பு ஏற்றுள்ள மேஜர் ஜெனரல் என். எஸ் ராவாட் கூறினார்.

## ராணுவம் ரோந்து

இதையடுத்து கலவரப் பகுதிகளில் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அமைதியை ஏற்படுத்த ராணுவம் பயன்படுத்தப்பட்டது.

அப்போது பிவாண்டியிலும், தானேயிலும் அமைதி நிலவிய போதிலும் பம்பாயில் இன்னும் பதட்ட நிலை நீடிக்கிறது. குர்லா, கோர்வாடி, விக்ரோலி மூலந்த், கட்கோபர், பண்டுப், நாக்பாடா, கோவண்டி ஆகிய பகுதிகளில்ராணுவம்சுற்றி வருகிறது.

பம்பாயில் ஒரு போலீஸ் நிலையத்தை வன்முறை கும்பல் பயங்கர ஆயுதங்களுடன் தாக்க முற்பட்டது. அவர்களைக் கலைக்க வேறுவழியின்றி போலீசார் துப்பாக்கியால் சுட்டனர். அதில் ஒரு பெண் உள்பட 8 பேர் இறந்து போனார்கள்.

## குண்டு வீச்சு

கட்கோபார், விக்ரோலி பகுதிகளில் கோஷ்டி மோதலில் ஈடுபட்ட வன்முறைக்கும்பல் மீது போலீசார் துப்பாக்கியால் சுட்டனர் அதில் 2

---

## கொழும்பில் நிலச்சரிவு: 40 பேர் பலி

கொழும்பு, மே 24— இலங்கையில் பயங்கர நிலச்சரிவு ஏற்பட்டது. கொழும்பில் இருந்து 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள அகலவட்டா ரப்பர் தோட்டப்பகுதியில் இந்த நிலச்சரிவு ஏற்பட்டது.

இதில் 40 பேர்பலியான தாகதகவல் கிடைத்துள்ளது.

ஆயிரம் குடியிருப்புகள் புதைந்துவிட்டதாகவும் செய்திகள் வந்துள்ளன.

---

8-ம் பக்கத் தொடர்ச்சி

அதிகரிப்பதற்காக அரசு இந்த நடவடிக்கையை மேற்கொண்டுள்ளது.

தமிழ்நாட்டில் ரசாயன தொழிற்சாலைகள் அமைக்கப்படும்போது தமிழ்நாடு ரசாயன பொருள் உற்பத்தியாளர்கள் சங்கத்தின் ஆலோசனையை தமிழக அரசு நாடும்

## உதவி செய்வோம்

நாட்டின் எந்த பாகத்திலிருந்தும் தமிழ்நாட்டில் ரசாயன தொழிற்சாலைகளை தொடங்கலாம். அவர்களுக்கு வேண்டிய எல்லா உதவிகளும் தரப்படும்.

தொழிற்சாலை அமைக்க விரும்பும் தொழில் முனைவர்களுக்கு 45 நாளில் சம்பந்தப்பட்ட அரசு துறைகளிடமிருந்து அனுமதி கிடைக்கும்.

விமானங்களில் பயன்படும் ஏர் பிரேக்குகள் தயாரிப்பதற்காக கிராபைட் மூலப் பொருளாகக் கொண்டு இயங்கும் தொழிற்சாலை ஒன்றை தமிழ்நாட்டில் அமைக்க ஜெனரல் மோட்டார்ஸ் என்ற அமெரிக்கநிறுவனம் முன்வந்துளளது.

இதற்கான 100 கோடி ரூபாய் திட்டத்தில் 40 சதவிகிதத் தொகையை முதலீடு செய்யவும் அந்நிறுவனம விருப்பம் தெரிவித்துள்ளது.

ராமநாதபுரம் மாவட்டத்தில் கிடைக்கும் கிராபைட்டை பயன்படுத்திக் கொள்ள இயலும் என்று அந்த நிறுவனம் நம்பிக்கை தெரிவித்துள்ளது.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

முன்னதாக சங்க தலைவர் எஸ். கிருஷ்ணசாமி வரவேற்று பேசினார் சங்க செயலாளர் பி. கே. பி. பணிக்கர் நன்றி கூறினார்.

---

விபத்தில் உயிரிழந்த நெய்வேலி

# கழகத் தோழர்கள் 5 பேர் குடும்பங்கட்கு ரூ. 1 லட்சம் உதவி

## முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கினார்

**விருத்தாசலம், மே, 24. விபத்தில் உயிரிழந்த நெய்வேலியைச் சேர்ந்த கழகத் தோழர்கள் 5 பேர் குடும்பங்களுக்கு ரூபாய் ஒரு லட்சத்தைமுதல்வர்புரட்சித்தலைவர்வழங்கியுள்ளார் கழகத்தின் சார்பில் இந்த உதவி வழங்கப்பட்டுள்ளது.**

மார்ச் மாதம் நடந்த விபத்தில் இந்த 5 பேர்களும் உயிரிழந்தனர்.

நெய்வேலியில் இருந்து கழக தொழிற்சங்கத்தைச் சேர்ந்த சிலர் வேன் மூலம் சென்னை வந்தனர்.

கடந்த மார்ச் 21-ம் தேதியன்று அவர்கள் வந்த வேன் மதுராந்தகம் சோத்துப்பாக்கம், மேல் மருவத்தூர் அருகே லாரியால்மோதப்பட்டது.

இந்த பயங்கர விபத்தில் வேனில் இருந்தவர்களில் டிரைவர் உட்பட 4 பேர் அந்த இடத்திலேயே உயிரிழந்தனர்.

பிறகு மருத்துவ மனையில் ஒருவர் உயிரிழந்தார்

விபத்தில் உயிரிழந்த வாசுதேவன், கோவிந்தசாமி, சின்னதுரை சண்முகசுந்தரம், நித்யானந்தம் ஆகிய 5 பேர்களுடைய குடும்பங்களுக்கும் கழகத்தின் சார்பில் ரூபாய் ஒரு லட்சத்தை முதல்வர் புரட்சித்தலைவர் வழங்கி உள்ளார்.

கடந்த 16ம் தேதியன்று முதல்வர் புரட்சித்தலைவர் மாயவரத்தில் தேர்தல் பிரச்சாரத்தை முடித்துக் கொண்டு கார் மூலம் சென்னை வந்தார்.

அப்போது வரும் வழியில் நெய்வேலியில் முதல்வர் புரட்சித் தலைவர் சிறிது நேரம் தங்கினார்.

அப்போது அண்ணா தொழிலாளர் ஊழியர் சங்க அனல் மின் நிலைய பகுதி செயலாளர் சோமுவிடம் முதல்வர் புரட்சித் தலைவர் அந்த நிதியை கொடுத்தார்.

அப்போது அமைச்சர் பண்ருட்டிராமச்சந்திரனும் உடன் இருந்தார். தேர்தல் பிரசாரத்திற்குச் சென்றிருந்த குறிஞ்சிப்பாடி கழக எம் எல். ஏ. தங்கராசு வந்தவுடன் அவருடைய முன்னிலையில் இந்த உதவி நிதியை வழங்கும்படி முதல்வர் புரட்சித்தலைவர் அப்போது கூறினார்.

---

பள்ளிமாணவர் சேர்ப்பு

## தமிழக அரசு உத்தரவு

சென்னை, மே 24— வரும் 1984-85 கல்வி ஆண்டிலும், அரசு அங்கீகாரம் பெறாத பள்ளிகளிலோ அல்லதுதனியாகவோ படித்த மாணவர்களை, அவர்கள் தகுதியுடையவர்களாக இருப்பின், அரசு அங்கீகாரம் பெற்றபள்ளிகளில் ஆறாம் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பு வரையில் சேர்த்து கொள்ள விதிவிலக்கு அளிக்கப்படலாம் என்று அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

இது சம்பந்தமாக விதிவிலக்கு ஆணை அளிக்க மாவட்ட கல்வி அலுவலர்களுக்கும், மகளிர் பள்ளி ஆய்வாளர்களுக்கும் அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

---

## வரதட்சணை கொடுமை: 4 பேருக்கு 6 மாத சிறை

வேலூர், மே. 24— வரதட்சணை கேட்டு கொடுமைப்படுத்திய கணவனுக்கும் மற்றும் மூவருக்கும் 6 மாத சிறை தண்டனை விதிக்கப்பட்டது.

எதிராஜுலு என்பவரின் மனைவி வரலட்சுமி. திருமணத்தின்போது போதிய வரதட்சணை கொண்டுவராததால தன துகணவரும் அவரைச் சேர்ந்தவர்களும் அடித்து சித்திரவதை செய்ததாக வரலட்சுமி போலீசில் புகார் கொடுத்தார்.

இதன் அடிப்படையில் எதிராஜுலு, சரோஜினி சாந்தி, ஞானாம்பாள் ஆகிய 4 பேர் மீது வழக்கு தொடரப்பட்டது.

வழக்கை விசாரித்த வேலூர் முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் இவர்கள் நால்வருக்கும் 6 மாத கடுங்காவல் தண்டனை விதித்தார்.

---

# சர்க்கரை விலை ஏற்றத்தை தடுக்க அரசு நடவடிக்கை

**சென்னை, மே. 24. சர்க்கரை விலை ஏற்றத்தைத் தடுக்க அரசு தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது**

இது குறித்து அரசு வெளியிட்டுள்ள பத்திரிகைக் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:-

சர்க்கரை மற்றும் பூரா சர்க்கரை [கண்டசாரி] யின் விலை ஏற்றத்தையும், பதுக்கலையும் தடுக்கும் நோக்கத்துடன் அங்கீகரிக்கப்பட்ட சர்க்கரை மற்றும் பூரா சர்க்கரை வியாபாரிகள் கையிருப்பு வைத்துக் கொள்ளக்கூடிய சர்க்கரை மற்றும் பூரா சர்க்கரையின் அதிக பட்ச அளவை குறைத்து அறிவிப்பு ஒன்றை மத்திய அரசு வெளியிட்டுளளது.

அதன்படி ஒரு லட்சமும் அதற்கு மேலும் மக்கள் தொகை உளள மாநகர மற்றும் நகர்களில் உளள சர்க்கரை வியாபாரிகள் அதிகபட்சமாக 250 குவிண்டால் சர்க்கரை கையிருப்பில் வைத்துக் கொள்ளலாம்.

ஒரு லட்சம் மக்கள் தொகைக்கு குறைவாக உள்ள நகர்களில் உள்ள சர்க்கரை வியாபாரிகள் அதிகபட்சமாக 100 குவிண்டால்சர்க்கரை கையிருப்பில் வைத்துக்கொள்ளலாம்.

### அதிகபட்சம்

பூரா சர்க்கரை வியாபாரிகள் அதிகபட்சமாக வைத்துக்கொள்ளக் கூடிய கையிருப்பு ஆயிரம்குவிண்டாலிலிருந்து 250 குவிண்டாலாககுறைக்கப்பட்டுள்ளது சர்க்கரை மற்றும் பூரா சர்க்கரை வியாபாரிகள் சரக்கு வந்த பத்து நாட்களுக்குள் அவற்றை விற்று விட வேண்டும் என்றும் கட்டுப்பாடுவிதிக்கப்பட்டுள்ளது.

மத்தியஅரசு மற்றொரு அறிவிப்பில் பூரா சர்க்கரைஉற்பத்தியாளர்கள், அவர்களிடம் 31-5-84 அன்று கையிருப்பில்உள்ள சரக்கு பற்றிய விபரங்களை 3-6-84க்குள தெரிவிக்கவேண்டும் என்றும் தெரிவித்துளளது.

இப்போது கைவசம் உள்ள இருப்பு மற்றும் 1984 செப்டம்பர் வரை உற்பத்தி செய்யக்கூடிய பூரா சர்க்கரை ஆகியவற்றை 31-10-84-க்குள் விற்றுவிட வேண்டும் என்றும், 1984-ஜூன் முதல், செப்டம்பர் வரை ஒவ்வொரு மாதத்திலும் விற்கப்படும் அளவு அம்மாத ஆரம்பத்தில் கையிருப்பில் இருந்ததில் இருபது சதவீதத்திற்கு குறைவாக இருக்கக் கூடாது என்றும்அறிவிப்பு செய்யப்பட்டுள்ளது

சர்க்கரை மற்றும் பூரா சர்க்கரை வியாபாரிகளும் பூரா சர்க்கரை உற்பத்தியாளர்களும் மத்திய அரசின் அறிவிப்பின்படி கையிருப்பு வைத்துக் கொளளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

இவ்வாறு பத்திரிகை குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

சாரணர் பயிற்சி:

# அமைச்சர் யூசுப் மகன் உட்பட 9 பேர் லண்டன் பயணம்

**சென்னை மே 24- சாரணர் பயிற்சி பெற அமைச்சர் யூசுப்பின் மகன் உட்பட 9 பேர் இன்று லண்டன் பயணமானார்கள்.**

14 வயதுக்கு உட்பட்ட சாரணர்களில் சிறந்த மாணவர்களை பல நாடுகளிலிருந்தும் இங்கிலாந்து அரசு ஆண்டுதோறும் அழைத்து லண்டனில் பயிற்சி கொடுத்து வருகிறது

3 வார கால பயிற்சிக்கு பிறகு அவர்களுக்குதேர்வு நடைபெறும்.

அந்த தேர்வில் வெற்றி பெறுபவர்களுக்கு தங்க வெள்ளி, வெண்கல பதக்கங்கள் அளிக்கப்படுகின்றன.

அந்த விருதுக்கு "டியூக் ஆப் எடின்பரோ விருது" என்று பெயர்

அந்த விருதுக்கான பயிற்சி பெற அந்த ஆண்டு தமிழ் நாட்டிலிருந்து ஸ்ரீஹரி, கிருஷ்ணபிரதாப் சுஜில்குமார், ஆனந்த சகாஸ்வரன், சையது முகமது ஆசம் வெங்கடேஷ், ரமேஷ். கிருஷ்ணன், சியாமசுந்தர் ஆகிய ஒன்பது மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

இவர்கள் சென்னை நுங்கம்பாக்கம் பத்மா சேஷாத்திரி பாலபவன், சாந்தோம் உயர்நிலைப்பள்ளி, திருநெல்வேலி மாவட்டம் பணகுடி அரசு மேல் நிலைப் பள்ளிகளைச் சேர்ந்த மாணவர்கள்.

### ஜனாதிபதி விருது பெற்றவர்

இவர்களில் சையது முகமதுஆசம் தமிழக நீர்பாசனத்துறை அமைச்சர் ஒய், எஸ் எம், யூசுப்பின் மகன் ஆவார்.

இவர் பணகுடியில் படித்து வருகிறார் சிறந்த சாரணருக்கான விருதை சமீபத்தில் ஜனாதிபதி ஜைல்சிங்கிடம் இருந்து பெற்றுள்ளார்.

இந்த 9 மாணவர்களும் நேற்றிரவு 7-30 மணிக்கு சென்னையிலிருந்து விமானம்மூலம் லண்டன்புறப்பட்டனர். பத்மசேஷாத்திரி பாலபவன பள்ளிமுதல்வர் திருமதி ஒய். ஜி பார்த்தசாரதி, சந்திரமணி ஆகியோர் இவர்களை அழைத்துச் சென்றனர்.

லண்டன் புறப்படுவதற்கு முன்பு சையது முகமது ஆசம் முதல்வர் புரட்சித்தலைவரை அத்து ஆசிபெற்றார்.

இந்த 9 மாணவர்களும் லண்டனில 3 வாரம் பயிற்சி பெற்று பின்னர் 18ந்தேதி முதல்பெல்ஜியம் ஹாலந்த், ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி சுவிட்சர்லாந்து, பிரான்சு ஆகியநாடுகளுக்கு 12 நாள் சுற்றுப்பயணம் செய்துவிட்டு ஜூலை 2ம் தேதி மாலை சென்னை திரும்புகிறார்கள்.

---

சுயவேலைவாய்ப்புத் திட்டம்:

# இந்தியாவிலேயே குறியளவை மிஞ்சிய தமிழக மாநிலம்

**புதுடெல்லி, மே 24- சுயவேலை வாய்ப்பிற்காக தமிழகத்திற்கு நிர்ணயிக்கப்பட்ட குறியளவை மிஞ்சி அதிகம் பேருக்கு கழக அரசு கடன் உதவி அளித்துள்ளது**

தமிழகத்தில் புரட்சித் தலைவர் அரசுசுயவேலை வாய்ப்புதிட்டத்தை தீவிரமாக அமுல் நடத்தி வருவது தெரிந்ததே.

இத்திட்டத்தின்படி தமிழ்நாட்டில்17,500பேர்களுக்கு கடன் உதவி அளிக்க திட்டமிடப்பட்டிருந்தது.

ஆனால் இந்தகுறியளவு மிஞசப்பட்டு மொத்தம் 21 ஆயிரத்து 247 பேர்களுக்கு கடன் உதவி அளிக்கப்பட்டுள்ளது.

இதுகுறித்து மத்திய அரசின் பத்திரிகை தகவல் குறிப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளதாவது:—

நாட்டில் படித்தவேலையற்ற இளைஞர்களுக்கான சுயவேலை வாய்ப்புத் திட்டத்தினால் 2.4 லட்சம் பேர் பயனடைந்துள்ளனர். இது 2.5 லட்ச இலக்கில் 96.24 சதவீதமாகும்.

இத்திட்டத்தின் கீழ் வங்கிகள் இதுவரை 400 கோடி ரூபாய் கடனாக வழங்கியுள்ளன,

தமிழ்நாட்டில் 21,247 விண்ணப்பங்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டது இது குறியளவான 17,500ல் 121.4 சதவீதமாகும்

யூனியன் பிரதேசங்களில் பாண்டிச்சேரி இத்திட்டத்தில் 92 சதவீதம் சாதனை புரிந்து முன்னணியில் உள்ளது.

இத்திட்டத்தின் கீழ் 18-35 வயதுவரம்பிலுள்ள வேலையில்லாதவர்கள், பள்ளி இறுதிவகுப்பு தேறியிருந்தால் தொழில் சேவைகள், சிறு வணிகம் துவக்க ரூ. 25,000 வரை கடன்கொடுக்கப்படும்.

கடனுதவியில் 25 சதவீத மானியத்தை, வங்கிகளுக்குமத்தியஅரசு அளிக்கிறது. சென்ற ஆண்டு ஆகஸ்ட் 15-ம்தேதி இத்திட்டத்தை பிரதமமந்திரி திருமதி இந்திரா காந்தி அறிவித்தார்.

இவ்வாறு இந்த பத்திரிக்கை குறிப்பில் தெரிவிக்கப்பட்டுளளது.

---

மருத்துவமனைகளில்

## போலீஸ் பாதுகாப்பு

சென்னை, மே 24. மருத்துவ மனைகளில் பாதுகாப்பு பணிகளை காவல்துறையினர் மேற்கொண்டுள்ளனர். உதவி கமிஷனர் அந்தஸ்திலுள்ள அதிகாரிகள் ஒவ்வொரு மருத்துவமனைக்கும் நியமிக்கப்பட்டு அவர்களின் கீழ் பாதுகாப்பு பணியில் போலீசார் ஈடுபட்டுள்ளனர்

சென்னை பொது மருத்துவமனையில் உதவி கமிஷனர் கிருபாகரனும், கீழ்பாக்கம் மருத்துவ கல்லூரி மருத்துவமனையில் உதவிகமிஷனர் செல்லதுரையும் ஸ்டான்லியில் கே. சண்முகமும், ராயப்பேட்டை மருத்துவமனையில்பிஎல். வெங்கட்ராமனும் இன்று பொறுப்பேற்றனர்

இவர்களின் கீழ் 1 இன்ஸ்பெக்டர், 3 உதவி இன்ஸ்பெக்டர்கள் 6 முதல் 8 தலைமை காவலர்கள் மற்றும் காவலர்கள் பணியுரிவர்

இதுவரை மருத்துவ துறை ஊழியர்களிடமிருந்த இந்தப்பணி இப்போது பாதுகாப்பை தீவரப்படுத்தும் நோக்கத்தோடு காவல் துறையிடம் ஒப்படைக்கப்படுகிறது.

---

மெதினால் மீதான வரி ரத்து:

# தொழில் வளர்ச்சிக்கு கழக அரசின் மற்றொரு நடவடிக்கை

## அமைச்சர் பொன்னையன் தகவல்

**சென்னை, மே 24. தமிழ்நாட்டில் ஆல்கஹாலை அடிப்படையாகக் கொண்ட தொழிற்சாலைகளை அதிகரிக்க அரசு திட்டமிட்டுள்ளது இதையொட்டி மெதினால் என்ற ரசாயனப் பொருளுக்கு மதுவிலக்கு சட்டத்தின் கீழ் விதித்திருந்ததடையை நீக்கியதோடு அதன் மீதான தீர்வைகளையும் தமிழக அரசு ரத்து செய்துள்ளது**

தமிழ்நாடு ரசாயனப் பொருள் உற்பத்தியாளர்கள் சங்க கூட்டம் சென்னையில் நடந்தது இக்கூட்டத்தில் தொழில் அமைச்சர் பொன்னையன் கலந்து கொண்டு பேசினார் அப்போது அவர் கூறியதாவது:—

தமிழ்நாட்டில் ஆல்கஹாலை மூலப் பொருளாகக் கொண்டு இயங்கும்தொழிற்சாலைகளுக்கு அனுமதி வழங்க அரசு முடிவு செய்தது. அதன்படி மெதினால், ரெக்டிபைட் ஸ்பிரிட், டினேச்சர்ட் ஸ்பிரிட் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் தொழிற்சாலைகளைத் தொடங்க தொழில்முனைவர்களுக்கு அனுமதி வழங்கப்படும்.

### தீர்வை ரத்து

ஆல்கஹாலை மூலப் பொருளாகக் கொண்டு இயங்கும் தொழிற்சாலைகளுக்கு தமிழ்நாட்டில் புதிதாக அமைக்கப்படும் சர்க்கரை ஆலைகளிலிருந்து கிடைக்கும் ஆல்கஹால் விநியோகிக்கப்படும்.

மேலும், மெதினால் என்ற ரசாயன பொருளுக்கு மது விலக்கு சட்டத்தின் கீழ் விதித்திருந்த தடையை நீக்கியதோடு அதன் மீதான தீர்வைகளையும் அரசு ரத்து செய்துள்ளது.

இதனால் மாநில அரசுக்கு ஏற்பட்ட வருவாய் நஷ்டம் என்றாலும் தமிழ்நாட்டில் தொழில் வளர்ச்சியை



8-ம் பக்கம் பார்க்க

நகரங்களில்

# டாப்கோ கடைகளை அதிகரிக்க திட்டம்: கல்யாணி தகவல்

சென்னை, மே. 24- டாப்கோ நிறுவனத் தின் மூலம் நகரங்களில நடத்தப்படும் கடை களின் எண்ணிக்கையை அதிகரிக்கவும் கோழி, வாத்து, பன்றி போன்றவைகளின் அபிவிருத் திக்கு ஊக்கமளிக்கவும் டாப்கோ நிறுவனம் திட்டமிட்டுள்ளதாக கல்யாணி ராமசாமி கூறினார்.

கோழி இன வளர்ச்சியை ஊக்குவிக்கவும், முட்டை அபிவிருத்தியை பெருக்கவும் தமிழ்நாடு கோழிப்பண்ணை வளர்ச்சிக் கழகம் சிறந்த உதவிகளை புரிந்து பணியாற்றி வரு கிறது.

சென்னை நகரில் மட்டு மல்லாது தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் கோழி வளர்ச்சியை பெருக்க தமிழ்நாடு கோழிப்பண்ணைவளர்ச்சி கழகம் உதவ்வருவதோடு தரமான கோழி இறைச் சியையும் சப்ளை செய்து வருகிறது.

சென்னை நகரில்மட்டும் 48 கடைகளை இந்த கார்ப்பரேசன் நடத்தி வருவதோடு 130 கடை களை ஏஜண்டுகள் மூலம் நடத்தி வருகிறது. தற் போது மேலும் 130 கடைகளை திறக்க வாய்ப்பு இருப்பதாகவும், அதற்கான பணியில் கார்ப்பரேசன் ஈடுபட்டு வருவதாகவும் இதன் தலைவர்கல்யாணி ராமசாமி தெரிவித்துள் ளார்.

## வாத்து வளர்ப்பு

குடியிருப்புகளில்இல்லத் தரசிகளையே ஏஜண்டுகளாக நியமித்து அவர்கள் மூலம் டாப்கோ நிறுவனம் கோழி மற்றும் முட்டை விற்பனைக்கு வகைசெய்ய இருப்பதாகவும் தெரி வித்த கல்யாணி ராமசாமி கோழியோடு மட்டுமின்றி, பன்றி, வாத்து போன்றவைகள் வளர்ப்பையும் ஊக்குவிக் கவும் கோழி வளர்ப்பு நிறுவனம் திட்டமிட்டிருப் பதாகவும் தெரிவித்தார்.

## ஜப்பானிய காடை

ஜப்பானிய காடை இன வளர்ப்பை ஊக்குவிக்க வும் இதே கார்ப்பரேசன் திட்டமிட்டுள்ளது என் றும் கல்யாணிராமசாமி கூறினார்,

கோழி வளர்ப்பு நிறு வன நிர்வாக இயக்குனர் ஷீலாராணி சுங்கத் குறிப் பிடுகையில் இந்திய தர நிர்ணயக் கழக முத் திரையோடு தங்கள் நிறுவனம் கோழி தீவனம் தயாரித்து தங்கள உப யோகம் போக மீதி உள்ள வற்றை பொதுமக்களுக்கு விற்று வருவதாகவும் கூறினார்.

சென்னையில்

# நேரு சிலை; சிவாஜி-கணேசன் திறந்து வைக்கிறார்

சென்னை, மே. 24— சென்னை சிவாஜிரசிகர் மன்றத்தின் சார்பாக ராயப்பேட்டையில் லாயிட்ஸ்ரோடும், பெசன்ட்ரோடும் சந்திக் கும் இடத்தில் நேரு சிலை அமைக்கப்பட்டுள்ளது. இந்த சிலை திறப்பு விழா வரும் 30-ந்தேதி எம். பி. சுப்பிரமணியம் தலைமை யில் நடக்கிறது. நடிகர் சிவாஜிகணேசன் எம்.பி நேரு சிலையை திறந்து வைக்கிறார். இவ்விழா வில் எம் எல். ஏ.க்கள் ஹாஜாசெரீப், ராஜசேக ரன், சவுரிராஜன்,சிவாஜி மன்றத்தலைவர் தளபதி சண்முகம், ஏ.எல்.எஸ். கண்ணப்பன், பார்த்த சாரதி செட்டியார் ஆகி யோர் கலந்து கொள்கின் றனர் என்று விழா குழு பொதுச்செயலாளர்குட்டி தெரிவித்துள்ளார்.

# எவரெஸ்ட்மலை உச்சியை அடைந்த இந்திய வீராங்கனை

காட்மாண்டு. மே. 24- உலகிலேயே மிக உயரமான எவரஸ்டு சிகரத்தை 28 வயது இந்திய பெண் ஒருவர் சென்றடைந்தார்.

உலகத்திலேயே மிக உயரமானசிகரம் எவரெஸ்டு அதன் உயரம் 29 ஆயிரத்து 2 அடி ஆகும். இந்த சிக ரத்தில் ஏறும் முயற்சியில் பல வெளி நாட்டவர்கள் ஈடுபட்டனர்.

இந்தியாவைச் சேர்ந்த பல குழுக்களும் முயற்சி செய்தன.

இதில் 19 ஆண்டு இடைவெளிக்குப் பிறகு கடந்த 9ந்தேதி சிக்கிம் மாநிலத்தைச் சேர்ந்த டோர்ஜி (வயது34) என்ற இந்திய வீரர் சிகரத்தை அடைந்து அங்கு இந்திய கொடியைநாட்டி வெற்றி பெற்றார்.

இப்போது நேற்று இந் திய பெண் ஒருவர் எவ ரெஸ்டுசிகரத்தை அடைந் தார். எவரஸ்டுசிகரத்தை அடையும் முதல் இந்திய பெண்மணி இவர் தான்.

அவர் பெயர் பச்சேந் திரிபால் (வயது 28) இவர் உத்திரபிரதேச மாநிலம் உத்திரகாசியைச் சேர்ந்த வர் ஆவார். கல்லூரி ஒன்றில் இவர் பொருளா தார பேராசிரியராக வேலை பார்த்து வரு கிறார்.

அவருடன் ஹதோடோர்ஜி சோனம் பல்ஜோர், நேபாள நாட்டுவழிகாட்டி சர்த்தார். ஆகியோரும் நேற்று எவரெஸ்டு சிகரத்தை அடைந்தனர்.

இந்த குழுவினர் எவரெஸ்டு சிகரத்தை அடைந்ததை நேபாளநாட்டு சுற்றுலா இலாகா அறி வித்தது.

## 43 நிமிடங்கள்

நேற்று பகல் 1- 07 மணிக்குபச்சேந்திரி தனது குழுவினருடன் எவரஸ்டு சிகரத்தில் பெருமை யுடன் ஏறி நின்றார். அங்கு அவர்கள் 43 நிமி டங்கள் தங்கியிருந்தனர்

பின்னர் அவர்கள் அங் கிருந்து கீழே இறங்க தொடங்கி இரவுஎவரஸ்டு சிகரத்தின் அடிவாரத்தி லுள்ள இந்திய முகாமிற்கு வந்து சேர்ந்தனர். அவர் களை முகாமின் தலைவர் அகோர்கிரன், இந்திரா குமார், மகான்பிசா,டாக் டர் இனோ மேத்தா ஆகி யோர் வரவேற்றனர்.

எவரெஸ்டு சிகரத்தில் ஏறி வெற்றிக்கொடி நாட்டியுள்ள முதல் இந் திய பெண்மணி பச்சேந்தி ரிக்கு ஜனாதிபதி ஜைல் சிங் வாழ்த்து தெரிவித் துள்ளார்.

"தாய்க்குலமே பெரு மைப்படக்கூடிய மகத் தான சாதனைஏற்படுத்தி இருக்கிறீர்கள். உங்க ளுக்கு இந்திய மக்கள் சார்பிலும், என் சார் பிலும் வாழ்த்துக்களைத் தெரிவித்துக கொள் கிறேன்."

இவ்வாறு ஜனாதிபதி ஜைல்சிங் அந்த வாழ்த் துச் செய்தியில் கூறியுள் ளார்.

பாசனத்திற்கு

# வைகை அணையில் தண்ணீர் திறப்பு

மதுரை மே. 24— விரகனூர் மதகு அணைக்குகீழுள்ள மானா மதுரை, சிவகங்கை, இளையாங்குடி பரமக் குடி தாலூகாக்களிலுள்ள வைகை கால்வாய்களின் மூலமாக பெறப்படும் வைகை பழைய பாசன நிலங்களுக்கு வைகை அணையிலிருந்து தண்ணீர் நேற்று6-மணிக்கு திறந்து விடப்பட்டது. 31-5-84 மாலை 6-00 மணி வரை பாசனத்திற்காக தண்ணீர் விடப்படும்.

இத் தகவலை இராம நாதபுரம் மாவட்ட ஆட் சித்தலைவர் என். குரு மூர்த்தி தெரிவித்துள்ளார்

ஆசிப் நகர் தொகுதி:

# மஜ்லிஸ் கட்சி வெற்றி

ஐதராபாத், மே, 24— ஆந்திராவில் ஆசிப் நகர் தொகுதியில் நடந்த இடைத்தேர்தலில் மஜ் லிஸ் இட்டாஹத்-துல்-முஸ்லிமீன் கட்சி தன் னுடைய இடத்தை தக்க வைத்துக் கொண்டது.

இக்கட்சி வேட்பாளர் டாக்டர் முகமது விஸரத் ரசூல்கான் 1700 வாக்கு கள் வித்தியாசத்தில் தெலுங்குதேச கட்சி வேட்பாளர்ஜி. நாராயண ராவை தோற்கடித்தார்

உப்பிலியாபுரத்தில் வெற்றி பெற்ற

# ஆர்.சரோஜா முதல்வர் புரட்சித்தலைவரிடம் வாழ்த்து பெற்றார்

சென்னை, மே. 24- உப்பிலியாபுரம் தொகுதியில் அமோக வெற்றி பெற்ற கழக வேட்பாளர் பி. சரோஜா நேற்று முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்து மாலை அணிவித்து ஆசி பெற்றார்.

தமிழகத்தில் 20-ந்தேதி 4 இடங்களில் இடைத் தேர்தல் நடைபெற்றது. அதில் உப்பிலியாபுரம் தொகுதியில் கழக வேட் பாளராக ஆர்.சரோஜா போட்டியிட்டார். இவரை எதிர்த்து இவருடைய தம்பி தங்கராசு தி.மு.க. சார்பில் போட்டியிட்டார்,

தேர்தல் முடிவில் கழக வேட்பாளர் சரோஜா அவருடைய தம்பி தங்க ராசுவை (திமுக வேட்பா ளர்) 16 ஆயிரம் ஓட்டு வித்தியாசத்தில் தோற் கடித்து வெற்றி வாகை சூடினார்.

வெற்றி பெற்ற கழகவேட்பாளர்சரோஜா நேற்று சென்னைக்கு வந் தார்.

நேற்று காலை அவர் முதல்வர் புரட்சித் தலைவரை கழகதலைமை அலுவலகத்தில் போய் பார்த்தார். முதல்வர் புரட்சித்தலைவருக்கு மாலைஅணிவித்துஅவரது காலில் விழுந்து வணங்கி னார்.

உப்பிலியாபுரம்தொகுதி யில் தேர்தல்பணியாற்றிய அமைச்சர்கள் குழந்தை வேலு, சவுந்தரராசன், விஜயசாரதி, நாமக்கல் அருணாசலம், திருச்சி மாவட்ட கழக செயலா ளர் ஆர். சவுந்திரராசன் ஆகியோர் அப்போது உட னிருந்தனர்.

அமைச்சர் குழந்தை வேலுவின்வீட்டிற்குவேட் பாளர் சரோஜா சென்று நன்றி தெரிவித்துள்ளார்.

# லாரி - பஸ் ஆட்டோ - ஸ்கூட்டர் மோதல்: 6 பேர் காயம்

சென்னை, மே 24- சென்னைசேத்துப்பட்டு பாலம் அருகே நேற்று காலை நடந்த ஒருசங்கிலி தொடர் விபத்தில் 6 பேர் காயம் அடைந்த னர்.

இந்த தொடர் விபத் தில்லாரி — ஸ்கூட்டர், பஸ்—ஆட்டோ ஆகியவை மோதிக்கொண்டன.

காயமடைந்த 6 பேரும் கீழ்ப்பாக்கம் மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டனர்.

கோட்டூர்புரத்தில்

# தி. மு. க.வினர் பயங்கர கலாட்டா: போலீசை தாக்கி சட்டை கிழிப்பு

## கூட்டத்தை கலைக்க வானைநோக்கி துப்பாக்கி சூடு

சென்னை. மே 24. சென்னை கோட்டூர் புரத்தில் தி.மு.க வினர் பயங்கர கலாட்டா செய்தனர் போலீசாரை தாக்கி சட்டையை கிழித்தனர். கூட்டத்தைக் கலைக்க போலீசார் வானை நோக்கி துப்பாக்கியால் சுட்டனர்.

இந்த சம்பவம் தொடர் பாக திமுகவினர் மூவர் கைது செய்யப்பட்டுள்ள னர்.

கோட்டூர்புரத்தில் கழகத் தோழர்கள் உப்பிலியாபுரம், தஞ்சை வெற்றியை ஒட்டி பட் டாசு வெடித்தனர்.

அப்போது தி.மு.க. வினரும் போட்டியாக பட்டாசு வெடித்தனர்.

இந்த சமயத்தில் இரு பிரிவினர்களிடையேயும் மோதல் ஏற்பட போலீ சுக்கு தகவல் தரப்பட் டது.

மோதல் நடந்த இடத் திற்கு 3 போலீசார் விரைந்து வந்தனர்.

இருதரப்பிலும் பெருங் கூட்டம் இருநதது அவர் களால் சமாளிக்க முடிய வில்லை.

இந்த சமயத்தில் அங்கு வந்த போலீசாரை திமுக வினர் தாக்கி சட்டையை கிழித்தனர்.

இதை அடுத்து அந்தப் போலீசார் போலீஸ் ஸ்டேஷனுக்குசென்றனர்.

திமுகவினரும் போலீஸ் ஸ்டேஷனுக்குசென்றனர். போலீஸ் ஸ்டேஷன் மீது கற்கள் வீசப்பட்டன.

இரவு நேரமாக இருந் ததால் கூட்டத்தை கலைக்க போலீசார் துப் பாக்கியை வானைநோக்கி சுட்டனர்.

தன் பிறகு திமுக வினர் கலைந்தனர்.

இந்த தாக்குதல் தொடர்பாக இளங்கோ, பழனி, மணி ஆகிய மூன்று திமுகவினர் கைது செய்யப்பட்டனர் மேலும் பலரை போலீசார் தேடி வருகின்றனர்.

# தேனீக்கள் நடத்திய திடீர் முற்றுகை

ஷ்ரீவேபோர்ட், (லூசியானா) மே. 24- ஜனநடமாட்டமுள்ள தெருவை பல லட்சக் கணக்கான தேனீக்கள் திடீர் முற்றுகை இட்டன 5 மணிநேர போராட்டத் டத்திற்குப் பிறகு இந்த முற்றுகை முறியடிக்கப் பட்டது.

தெற்கு டகோடாவில் உள்ள தேனீப் பண் ணைக்கு 720 பெட்டி களை ஏற்றிக்கொண்டு ஒரு டிரக்கு சென்றது. ஒவ்வொரு பெட்டியிலும் 25 ஆயிரம் தேனீக்கள் இருந்தன.

ரோடு ஓரத்தில் இருந்த ஒரு கால்வாயில் டிரக்கு வண்டி இறங்கி குடை கவிழ்ந்தது. உடனே பெட்டிகள் உடைந்துஅதி லிருந்த தேனீக்கள் சுதந் திரமாக பறக்க ஆரம்பித் தன.

பெருந்திரளாகரோடில் போவோர் வருவோரை முற்றுகை இட்டன. இந்த தேனீக்களுக்கு பயந்து மக்கள் அங்கும் இங்கும் சிதறி ஓடினார்கள்,

செய்வதறியாது திகைத்து நின்ற நேரத் தில் தேனீவளர்ப்பதையே தொழிலாககொண்டவர்கள் விசேஷ உடை அணிந்து தேனீக்களை மடக்கிப் பிடித்தனர். 5 மணிநேர போராட்டத்திற்கு பிறகு தேனீக்கள் முற்றுகையை வெற்றிகரமாக முறியடித் தார்கள்.

12 ஆண்டுகளாக

# ஒரு ராஜ குடும்பத்தின் ரயிலடி வாசம்

புதுடெல்லி, மே 24— 12 ஆண்டுகளாக ரயில் நிலையத்தை தனது அரண்மனையாக்கி வாழ் கிறார் ஒருராஜா. இந்த சம்பவம் பற்றிய விபர மாவது:-

நானாசாகிப் நவாப் லக்னோவின் மகாராஜாவாக இருந்தவர் 1857ம்ஆண்டு நடந்த சிப்பாய்கலகத்தின் போது இவருக்கு சொந்த மான 12 மாளிகைகளை பிரிட்டிஷ் அரசுகைப்பற்றி யது. சுதந்திரத்திற்கு பின் மைய அரசு இந்த அரண் மனைகளை எடுத்துக் கொண்டது.

மாளிகையை இழந்த ராஜகுடும்பம் தங்கள் மாளிகை தங்க ளுக்கு திருப்பித்தரப்பட வேண்டுமென்பதற்காக டில்லி ரயில் நிலையத்தை தங்கள் வாசஸ்தல மாகக் கொண்டனர். இந்த ரயில் நிலைய வாசஸ்தல வாழ்வு 12 ஆண்டுகளாக தொடர்ந்து கொண்டிருக்கிறது.

இதற்கிடையில் மைய அரசு இந்த குடும்பத்திற்கு பங்களா ஒன்றைத் தர முன்வந்தபோது அதை ஏற்றுக்கொள்ள மறுத்த தோடு மாளிகை ஒன்று தான் தங்களுக்கு தேவையே யொழிய பங்களா வேண்டாம் என்று கூறி விட்டது.

இந்த ராஜ குடும்பம் தங்கள் கோரிக்கையை வலியுறுத்தி ஜனாதிபதி, பிரதமர், மற்றும் ராஜீவ் காந்தி ஆகியோருக்கும் கடிதம் எழுதியதாகத் தெரி கிறது.

ரயில் நிலையத்தில் முக் கியஸ்தர்கள் தங்கும் அறை ஒன்றில் தனது வாழ்வை கழித்துவரும் இந்த ராஜ குடும்பம் ரயில் நிலையத்திலுள்ள பெஞ்சுகளிலேயே உறங்கு கின்றனர்.

ரயிலடி வாசம் புரிந் திருக்கும் இந்த ராஜ குடும்பத்தை அங்கிருந்து கிளப்ப முயற்சி நடப்ப தாக தெரிகிறது.